# ப்ரௌடாநுபூதி

[அன்ம அநுபவத்தின் பூர்ண முதிர்ச்சி பெற்ற ப்ரௌட நிலையைக் கூறுவது.]

**ப்ரௌட4 ப்ரௌட4 நிஜாநுபூ4தி க3ளித த்3வைதேந்த்3ரஜாலோ கு3ரு:**
**கூ3ட4ம் கூ3ட4 -மகெ4ளக4 - து3ஷ்ட - குதி4யாம் ஸ்பஷ்டம் ஸுதீ4சாலிநாம்|**
**ஸ்வாந்தே ஸம்யகி3ஹாநுபூ4தமபி ஸச்சி2ஷ்யாவபோ3தா4ய தத**
**ஸத்யம் ஸம்ஸ்ம்ருதவாந் ஸமஸ்தஜக3தாம் நைஜம் நிஜாலோகநாத் || 1**

முற்றிலும் முற்றின தன்னுடைய அனுபவத்தினால், இந்திரஜாலம் போலுள்ள வேற்றுமையாகத் தோன்றும் ஜகத் எவருக்கு நழுவி விட்டதோ அந்த குருவானவர், பாபக் கூட்டத்தினால் கெட்டுப்போன புத்தியோடு கூடினவர் களுக்கு மிகவும் மறைந்ததாயும், நல்ல புத்திசாலிகளுக்கு தெளிவாக உள்ளதும், எல்லா உலகங்களுக்கும் உள்தத்வமாக உள்ளதுமான அந்த ஸத்யமான ஆத்ம ஸ்வ ரூபத்தை தனக்குள் நன்றாக அனுபவிக்கப்பட்டிருந்தபோதிலும் தகுந்த சிஷ்யனுக்கு அறிவிப்பதற்காக தனக்குள் பார்த்து ஞாபகப்படுத்திக்கொண்டார்.

**த்3வைதம் மய்யகி2லம் ஸமுத்தி2தமித3ம் மித்2யா மந:கல்பிதம்**
**தோயம் தோயவிவர்ஜிதே மருதலே ப்4ராந்த்யைவ ஸித்3த4ம் நஹி |**
**யத்3யேவம் க2லு த்3ருச்யமேதத3கி2லம் நாஹம் நவா தந் மம**
**ப்ரௌடாநந்த சிதேக ஸன்மய வபு: சுத்தோ(அ)ஸ்ம்யகண்டோ (அ)ஸ்ம்யஹம் || 2**

என்னிடத்தில் கிளம்பியுள்ள இந்த வேற்றுமைத் தோற்றம் எல்லாம மனஸினால் கல்பிக்கப்பட்டது மித்யையே. (தோற்றத்தில் மெய்போலிருந்து வாஸ்தவத்தால் பொய்யாய்ப் போவதே மித்யை.) ஜலமேயில்லாத பாலைவனத் தரையில் பிராந்தியினால் மட்டுமே ஏற்பட்ட ஜலம் (கானல் நீர்) வாஸ்தவத்தில் இல்லையல்லவா? ஆகையால் இந்த அனுபவிக்கப்படுவதெல்லாம் நான் அல்ல, அது என்னுடையதும் அல்ல. உத்தமமான ஆனந்தத்தையும், சுத்தமான ஞானத்தையும், ஸத்தையையும் மட்டுமே ஸ்வ ரூபமாய் கொண்ட சுத்தமான ஆத்ம ஸ்வரூபமாக நான் இருக்கிறேன். நான் துண்டுபடாத பரிபூர்ணனாக இருக்கிறேன்.

**தே3ஹோ நாஹ - மசேதநோ(அ)யமநிசம் குட்3யாதி3வந்நிச்சிதோ**
**நாஹம் ப்ராணமயோ(அ)பி வா த்3ருதித்4ருதோ வாயுர் யதா2 நிச்சித: |**
**ஸோ(அ)ஹம் நாபி மநோமய: கபிசல: கார்பண்யது3ஷ்டோ ந வா**
**பு3த்3தி4ர் பு3த்3த4கு-வ்ருத்திகேவ குஹநா நாஜ்ஞாநமந்த4ம்தம: || 3**

நான் சுவர் முதலான வைபோல எப்பொழுதும் அறிவற்ற ஜடம் என்று தீர்மானிக்கப்பட்ட தேஹம் அல்ல. நான் துருத்தியில் அடைத்த காற்றுப் போலவே நிச்சயமாயுள்ள பிராணமய கோசமும் அல்ல. நான் குரங்குமாதிரி சஞ்சலமாயும்,

சிறுமைத்தன மென்ற தோஷத்தோடு கூடியதாயுமுள்ள மனோமய கோசமும் அல்ல. புத்த மதத்தில் சேர்ந்து நிந்தித மான நடத்தையோடு கூடினவளைப்போல ஏமாற்றும் தன்மையுள்ள புத்தியும் அல்ல. மிகவும் இருட்டா யிருக்கும் அஞ்ஞானமும் அல்ல. எதெல்லாம் அனுபவிக்கப்படுகிறதோ அதெல்லாம் ஆத்மா அல்ல.

**நாஹம் கா$^{2}$தி$^{3}$ரபி ஸ்பு$^{2}$டம் மருதல ப்$^{4}$ராஜத் ப$^{4}$யஸ்-ஸாம்யத:**
**தேப்$^{4}$யோ நித்யவிலக்ஷணோ(அ)கி$^{2}$லத்$^{3}$ருசி: ஸௌர ப்ரகாசோ யதா$^{2}$ |**
**த்$^{3}$ருச்யை: ஸங்க$^{3}$-விவர்ஜிதோ க$^{3}$க$^{3}$நவத் ஸம்பூர்ணரூபோ(அ)ஸ்ம்யஹம்**
**வஸ்து-ஸ்தி$^{2}$த்யநுரோத$^{4}$தஸ்-த்வஹமித$^{3}$ம் வீச்யாதி$^{3}$ ஸிந்து$^{4}$ர் யதா$^{2}$ ||** 4

நான் ஆகாசம் முதலான பூதங்களும் அல்ல என்பது தெளிவு. அவைகள் பாலைவனத் தரையில் தோன்றும் ஜலத்திற்கு (கானல் நீருக்கு) சமானமா யிருப்பதால் அவைகளிலிருந்து எப்பொழுதும் வேறுபட்ட லக்ஷணத்தோடு கூடியவன் நான். எப்படி ஸூர்யனுடைய பிரகாசமானது (பிரகாசிக்கப்படும் பதார்த்தங்களுடன் ஒட்டாமலே) இருக்கிறதோ அப்படியே நான் எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டிருப்பவனாக இருந்தும் பார்க்கப்படும் பதார்த்தங்களுடன் ஒட்டுதல் இல்லாதவன். நான் ஆகாசம் போல எங்கும் நிறைந்த ஸ்வரூபத்தை யுடையவனாக இருக்கிறேன். ஆனால், எவ்விதம் ஸமுத்திரம் தான் அலை முதலான தாகத் தோன்றுகிறதோ அப்படியே நான் பதார்த்தங்களுடைய நிலைமையை அனுஸரித்து இதுவாக (அந்த பதார்த்தமாக) த் தோன்றுகிறேன்.

**நிர்த்$^{3}$வைதோ(அ)ஸ்ம்யஹமஸ்மி நிர்மல-சிதா$^{3}$காசோ(அ)ஸ்மி பூர்ணோ(அ)ஸ்ம்யஹம்**
**நிர்தே$^{3}$ஹோ(அ)ஸ்மி நிரிந்த்$^{3}$ரியோ(அ)ஸ்மி நிதராம் நிஷ்ப்ராணவர்கோ$^{3}$ (அ)ஸ்ம்யஹம் |**
**நிர்முக்தாசுபமாநஸோ(அ)ஸ்மி விக$^{3}$லத்-விஜ்ஞான கோசோ(அ)ஸ்ம்யஹம்**
**நிர்மாயோ(அ)ஸ்மி நிரந்தரோ(அ)ஸ்மி விபுல ப்ரௌட$^{4}$ ப்ரகாசோ(அ)ஸ்ம்யஹம் || 5**

நான் வேற்றுமையற்றவனாக இருக்கிறேன். நிர்மலமான ஞானஸ்வரூபனாக இருக்கிறேன். ஆகாசமாக (நாலா பக்கங்களிலும்) பிரகாசிக்கிறவனாக இருக் கிறேன். பூரணனாக இருக்கிறேன். தேஹமற்றவனாக இருக்கிறேன். இந்திரிய மற்றவனாக இருக்கிறேன். நிச்சயமாக நான் (ஐந்து) பிராணவர்க்க மற்றவனாக அமங்கள மான மனஸிலிருந்து விடுபட்டவனாக இருக்கிறேன். மாயையற்றவனாக இருக்கிறேன். இடைவெளியில்லாதவனாக இருக்கிறேன். நான் விஸ்தாரமான செழித்த (ஞானப்) பிரகாசனாக இருக்கிறேன்.

**மத்தோ(அ)ந்யத் நஹி கிஞ்சித3ஸ்தி யதி3 சித்3பா4ஸ்யம் ததஸ்தந்-ம்ருஷா**
**கு3ஞ்ஜா-வஹ்நிவதே3வ ஸர்வகலநாதி4ஷ்டா2ன பூ4தோ(அ)ஸ்யம்ஹம் |**
**ஸர்வஸ்யாபி த்3ருக3ஸ்ம்யஹம் ஸமரஸ: சாந்தோ(அ)ஸ்ம்யபாபோ (அ)ஸ்ம்யஹம்**
**பூர்ணோ(அ)ஸ்மி த்3வயவர்ஜிதோ(அ)ஸ்மி விபுலாகாசோ(அ)ஸ்மி நித்யோ (அ)ஸ்ம்யஹம் || 6**

என்னைத் தவிர வேறாக எதுவும் கிடையவே கிடையாது. ஏதாவது சைதன்யத்தினால் பிரகாசிக்கப்படுகிறதாய் இருந்ததேயானால், அப்பொழுது அது குந்துமணியில் தோன்றும் நெருப்பைப் போலவே (வெளிச்சம்பட்டுக் குந்துமணி தீப்பொறிபோலத் தெரிவது மாதிரி) பொய்யேயாகும். நான் எல்லாத் தோற்றங்களுக்கும் அதிஷ்டானமாக இருக்கிறேன். எல்லாவற்றையும் பார்ப்பவனாக இருக்கிறேன். நான் ஸமர. ஸனாயிருப்பவன். சாந்தனாக இருக்கிறேன். நான் எவ்வித தோஷமும் இல்லாதவனாக இருக்கிறேன். நிறைந்தவனாக இருக்கிறேன். இரண்டற்றவனாக நான் இருக்கிறேன். விஸ்தார ஆகாசமாக இருக்கிறேன். எக்காலமும் உள்ளவனாக இருக்கிறேன்.

**மய்யஸ்மின் பரமார்த2கே ச்ருதிசிரோவேத்3யே ஸ்வதோபா4ஸனே**
**கா வா விப்ரதிபத்திரேத3த2கிலம் பா4த்யேவ யத்ஸந்நிதே4: |**
**ஸௌராலோகவசாத் ப்ரதீதமகி3லம் பச்யந் ந தஸ்மிந் ஜந:**
**ஸந்தி3க்3தோ(அ)ஸ்த்யத ஏவ கேவலசிவ கோ(அ)பி ப்ரகாசோ(அ)ஸ்ம்யஹம் || 7**

பரமார்த்த வஸ்துவாயும், வேதாந்த வாக்கியங்களினாலேயே அறிய வேண்டியதாயும், தானாகவே பிரகாசிக்கிறதாயும் உள்ளது என் ஸ்வரூபம். என் ஸ்வரூபத்தின் ஸாந்நித்யம் இருப்பதினாலேயே இது எல்லாம் பிரகாசிக்கிறது. இதில் பலவித அபிப்பிராயம் என்ன இருக்க முடியும்? ஸூர்ய வெளிச்சத்தின் உதவியினால் எல்லாம் தெரிவதாகப் பார்த்துக்கொண்டேயிருக்கிற மனிதன் அது விஷயத்தில் ஸந்தேஹம் கொள்ள மாட்டான். ஆகையினாலேயே நான் சுத்த சிவ (மங்கள) ஸ்வரூபனாய், ஞான ஸ்வரூபனாய் வர்ணிக்க முடியாத வஸ்துவாக இருக்கிறேன்.

(ஸூர்யப் பிரகாசத்தினால் தான் மற்ற ஜடமான பதார்த்தங்கள் பிரகாசிக்கின்றன என்பது யாவரும் அறிந்த விஷயமே. இதை அறிந்துகொண்டே யிருக்கும் போது ஸூர்யன் உண்டா இல்லையா, ஸூர்யன் பிரகாச ஸ்வரூபனா இல்லையா, என்றெல்லாம் யாருக்காவது சந்தேஹம் வருவதுண்டா? அதே மாதிரி தான் இருப்பதினால் தான் ஜகத் தோன்றுகிறதென்று எல்லாருக்கும் தெரிந்த விஷயமாயிருக்கையில், தான் உண்டா இல்லையா, தான் அறிவு ஸ்வரூபனா இல்லையா என்றெல்லாம் சந்தேஹிக்க இடம் ஏது?)

**நித்ய-ஸ்பூ2ர்த்திமயோ(அ)ஸ்மி நிர்மல-ஸதா3காசோ(அ)ஸ்மி சாந்தோ(அ) ஸ்ம்யஹம்**
**நித்யாநந்த3மயோ(அ)ஸ்மி நிர்க3த-மஹா மோஹாந்தகாரோ(அ)ஸ்ம்யஹம் |**
**விஜ்ஞாதம் பரமார்த்த2-தத்வமகி2லம் நைஜம் நிர்ஸ்தாசுபம்**
**முக்த-ப்ராப்ய-பாஸ்த-பே4த3 கலநா கைவல்ய ஸம்ஜ்ஞோ(அ)ஸ்ம்ய ஹம் || 8**

எப்பொழுதும் பிரகாசஸ்வரூபனாய் இருக்கிறேன். நிர்மலமாயும் இருக்கும் தன்மையுடையதாயும், எங்கும் ப்ரகாசிக்கும் தன்மையுடையதாயும், இருக்கிறேன். நான் சாந்தமுள்ளவனாக இருக்கிறேன். நான் மஹா மோஹமாகிற இருட்டு நன்கு விலகினவனாக இருக்கிறேன். அமங்கள மெல்லாம் விலகினதான, மோக்ஷ மடைந்தவர்களாலேயே அடையத்தக்கதான, தனக்குச் சொந்தமான, பரமார்த்த தத்வம் முழுதும் என்னால் அறியப்பட்டு விட்டது. நான் வேற்றுமை ஏற்படுவதை யெல்லாம் விலக்கி தனித்திருக்கும் தன்மையையே அடையாள முள்ளவனாக இருக்கிறேன்.

**ஸ்வாப்ந-த்3வைதவதே3வ ஜாக்3ரதமபி த்3வைதம் மநோமாத்ரகம்**
**மித்2யேத்யேவ விஹாய ஸச்சித3மல-ஸ்வாத்மைக-ரூபோ(அ)ஸம்யஹம் |**
**யத்3வா வேத்3ய-மசேஷமேத-தநிசம் மத்3-ரூபமேவேத்யபி**
**ஜ்ஞாத்வா த்யக்த மருந் மஹோத3தி3ரிவ ப்ரௌடோ4 கபீ4ரோ(அ)ஸ்ம்யஹம் || 9**

ஸ்வப்னத்தில் காணப்படும் வேற்றுமையைப் போலவேதான் ஜாக்கிரத் காலத்தில் காணப்படும் வேற்றுமையும் மனஸினால் கல்பிக்கப்பட்டதுதான். ஆகையால் வாஸ்தவமல்லாதது என்று அதை விட்டே விட்டு விட்டு, ஸத்தாகவும், சித்தாகவும் நிர்மலமாகவுமுள்ள தன் ஆத்மாவாகவே இருக்கும் ஸ்வரூப முள்ளவனாக நான் இருக்கிறேன், அல்லது அறியப்படும் இதுவெல்லாம் எப் பொழுதும் என்னுடைய ரூபம் தான் என்றும் அறிந்து கொண்டு, காற்றில்லாத பெரிய ஸமுத்திரம் போல, பெருமையுடனும் கம்பீரமாகவும் நான் இருக்கிறேன்.

(ஆத்ம ஞானிக்கு உலகம் தோன்றும் போது அது வெறும் தோற்றமே தவிர வாஸ்தவமல்ல என்ற எண்ணத்துடன் அதைப் பார்த்துக் கொண்டிருந்தாலும் இருக்கலாம். அல்லது அந்தத் தோற்றமும் ஆத்மா வில் ஆரோபிதமான படியால் ஆத்மாவைத் தவிர்த்து அதற்கு தனித்து இருப்புக் கிடையாததினால் அவ்விதம் தோன்றுவதும் ஆத்மாதான் என்றும் பார்த்துக்கொண்டிருந்தாலும் இருக்கலாம். தோற்றம் என்கிற முறையில் முதல் பார்வையும், ஆத்மாவில் தோற்றம் என்கிற முறையில் இரண்டாவது பார்வையும் ஆக இரண்டும் உசிதமேயாகும்.)

**க3ந்தவ்யம் கிமிஹாஸ்தி ஸர்வ பரிபூர்ணஸ்-யாப்-யகண்டா3க்ருதே:**
**கர்தவ்யம் கிமிஹாஸ்தி நிஷ்க்ரியதநோர்-மோகைக்ஷக ரூபஸ்ய மே |**
**நிர்த்3வைதஸ்ய ந ஹேயமந்யத3பி வா நோ வா(அ)ப்யுபேயாந்தரம்**
**சாந்தோ(அ)த்3யாஸ்மி விமுக்த-தோய-விமலோ கேகோ4 யதா3 நிர்மல: 10**

எல்லாவற்றிலும் நிறைந்திருப்பவனாகவும், துண்டுபடாத ஸ்வரூபமுள்ளவனாகவும் இருக்கிற எனக்குப் போகவேண்டியதாக இங்கே எது எவ்விடம் இருக்கிறது? செய்கையேயில்லாத ஸ்வரூபத்தை உடையவனாகவும் மோக்ஷத்தையே ஸ்வ ரூபமாயுடையவனாகவும் இருக்கிற எனக்கு செய்ய வேண்டியதாக இங்கே எது இருக்கிறது? இரண்டற்றவனாக இருக்கும் எனக்கு மற்றொன்று என்று ஏதேனும் விலக்கவேண்டியதாகக் கிடையாது. அடைய வேண்டியதாயும் வேறு எதுவும் கிடையாது. இப்பொழுது எப்படி மேகமானது நன்கு ஜலத்தை வர்ஷித்து விட்ட பிறகு நிர்மலமாயிருக்குமோ அப்படியே நிர்மலனாகவும், சாந்தனாகவும் இருக்கிறேன்.

**கிம் ந ப்ராப்தமித: புரா கிமது4நா லப்3த4ம் விசாராதி3நா**
**யஸ்மாத் தத்-ஸுக2ரூபமேவ ஸததம் ஜாஜ்வல்யமாநோ(அ)ஸ்ம்யஹம் ।**
**கிம் வா(அ)பேக்ஷ்யமிஹாபி மய்யதிதராம் மித்2யா-விசாராதி3கம்**
**த்3வைதாத்3வைத-விவர்ஜிதே ஸமரஸே மௌநம் பரம் ஸம்மதம் ॥** 11

இதற்கு முன்னால் (என்னால்) எது அடையப்படாமலிருந்தது? இப்பொழுது வேதாந்த விசாரம் முதலான தினால் (என்னால்) எது அடையப்பட்டிருக்கிறது? (ஒன்றுமில்லை). ஏனென்றால் நான் எப்பொழுதுமே அந்த எதையும் அடைய வேண்டாத ஆனந்த ஸ்வரூபனாகவே இருந்துகொண்டு மிகவும் ஜ்வலித்துக் கொண்டே இருக்கிறேன். இரண்டாயிருக்கும் தன்மை, இரண்டற்ற தனமை என்கிற விவஹாரங்களெல்லாம் இல்லாதவனாய் ஸமரஸமாயிருக்கிற என்னிடத்தில் இந்த நிலையிலும் பொய்யான விசாரம் முதலானது அவசியமாக வேண்டியுள்ளதா? என்ற (இந்நிலையில்) மௌனம்தான் சிலாக்கியமென்று ஒப்புக்கொள்ள வேண்டும்.

**ச்ரோதவ்யம் ச கிமஸ்தி பூர்ண ஸுத்3ருசோ நித்யாபரோக்ஷஸ்ய மே**
**மந்தவ்யம் ச ந மே(அ)ஸ்தி கிஞ்சித3பி வா நி:ஸம்சய ஜ்யோதிஷ: ।**
**த்4யாத்ரு-த்4யேய-விபே4த-ஹாநி-வபுஷோ ந த்4யேய-மஸ்த்யேவ மே**
**ஸர்வாத்மைக மஹாரஸஸ்ய ஸததம் நோ வா ஸமாதி4ர்-மம ॥** 12

பூரணமாக நல்ல ஞானஸ்வரூபியாயும் எப்பொழுதும் பிரத்யக்ஷமாகவே தெரிந்து கொண்டிருப்பவனாயும் இருக்கிற எனக்குக் கேட்டுத் தெரிந்து கொள்ள வேண்டியது தான் என்ன இருக்கிறது? ஸந்தேஹத்திற்கு இடமில்லாத ஜ்யோதி ஸ்வரூபனான எனக்கு மனனம் செய்யவேண்டியதும் கொஞ்சம் கூடக் கிடையாது. தியானம் செய்கிறவன்; தியானம் செய்யப்படும் பதார்த்தம் என்கிற பேதத்தைப் போக்கடிக்கும் ஸ்வரூபத்தோடு கூடின எனக்குத் தியானம் செய்ய வேண்டியதாக ஒன்றும் கிடையவே கிடையாது. எப்பொழுதும் எல்லாவற்றிற்கும் ஆத்மாவாக இருக்கும் பெரும் தீஞ்சுவை வடிவனான எனக்கு ஸமாதி நிலையும் கிடையாது.

**ஆத்மாநாத்ம விவேசநாபி மம நோ வித்3வத்-க்ருதா ரோசதே**
**(அ)நாத்மா நாஸ்தி யத3ஸ்தி கோ3சரவபு: கோ வா விவேக்தும் க்ஷமீ (ம:) ।**
**மித்2யாவாத3 விசார சிந்தநமஹோ குர்வந்த்-யத்3ருஷ்டாத்மகா:**
**ப்4ராந்தா ஏவ ந பாரகா3 த்3ருட தி4ய ஸ்தூஷ்ணீம் சிலாவத் ஸ்திதா: ॥** 13

வித்வான்களால் செய்யப்படும் ஆத்மா வேறு, அநாத்மா (ஆத்மா அல்லாதது) வேறு என்ற பகுப்பு எனக்கும் பிடிக்கவில்லை. ஏனென்றால் அநாத்மா வென்று தனியாக ஒரு பதார்த்தம் கிடையவே கிடையாது. தனியாகத் தென்படும் ஸ்வபாவத்துடன் அநாத்மா இருந்ததேயானால் அதை ஆராய்ச்சியால் அஸத்யமென்று தீர்மானிக்க யார்தான் ஸாமர்த்தியமுள்ளவன்? பாவம்! ஆத்ம தத்வ ஸாக்ஷாத்காரம் செய்யாதவர்கள் வீணாக வாதம், விசாரம், சிந்தனம் இவைகளைச் செய்கிறார்கள். அவர்கள் பிராந்தியில் அகப்பட்டவர்களே தவிர, கரையேறினவர்கள் அல்ல. திடமான ஞான முள்ளவர்கள் பாறையைப் போலப் பேசாமல் இருப்பார்கள்.

(ஆத்மா, அநாத்மா என்று பிரிக்கிறபோதே ஆத்மாவில் சேராமல் தனியாய் அநாத்மா என்று ஒன்று இருப்பதாக ஆகி விடுகிறது. இவ்வாறு ஒன்று தனியாய் இருப்பதாக எடுத்துக் கொண்டு விட்டு, பிறகு ஆத்மா தவிர அநாத்மா என்று எதுவும் இல்லை என்றும் எப்படிப் பொருந்தும் என்பது கேள்வி,)

**வஸ்து-ஸ்தி2த்யநுரோத4தஸ்-த்வஹ-மஹோ கச்சித் பதா3ர்தோ ந சா -**
**ப்யேவம் கோ(அ)பி விபா4மி ஸந்ததத்3ருசிர் வாங்மாநஸா கோ3சர: |**
**நிஷ்பாபோ(அ)ஸ்ம்-யப4யோ(அ)ஸ்ம்யஹம் விக3த-து3ச்சங்கா களங்கோ(அ)**
**ஸ்ம்யஹம்**
**ஸம்சாந்தாநுபமான-சீதளமஹ: ப்ரௌட4 ப்ரகாசே(அ)ஸம்யஹம் ||** 14

வஸ்துக்களுடைய நிலையை அனுஸரித்து நான் தான் எவ்வித பதார்த்தமாகவும் இருக்கிறேன். என்ன ஆச்சர்யம் ! அப்படியும் (அப்பதார்த்தமாக) நான் இல்லை. எப்பொழுதும் ஞானஸ்வரூபனாய், வாக்குக்காவது, மனஸுக்காவது விஷயமாகாதவனாய், இன்ன வேளை என வொண்ணாதவனாய் நன்கு பிரகாசித்துக்கொண்டிருக்கிறேன். எவ்வித தோஷமும் அற்றவனாக இருக்கிறேன். பயமில்லாதவனாக நான் இருக்கிறேன். துஷ்ட ஸம்சயமாகிற மாசு அற்றவனாக நான் இருக்கிறேன். நன்கு அடங்கின தாய், குளுமையாயுள்ள தேஜஸ்ஸைப் போல மிகவும் பிரகாசமுள்ளவனாக நான் இருக்கிறேன்.

**யோ(அ)ஹம் பூர்வமித: ப்ரசாந்தகலந: சுத்3தோ4(அ)ஸ்மி பு3த்3தோ4(அ)ஸ்ம்யஹம்**
**யஸ்மான் மத்த இத3ம் ஸமுத்தி2தமபூ4தேதன் மயா தா4ர்யதே |**
**மய்யேவ ப்ரளயம் ப்ரயாதி நிரதி4ஷ்டாநாய தஸ்மை ஸதா3**
**ஸத்யாநந்த3-சிதா3த்மகாய விபுல-ப்ரஜ்ஞாய மஹ்யம் நம: ||** 15

எந்த நான் இதற்கு (இந்தப் பிரபஞ்சம் உண்டாவதற்கு) முன்னால் எவ்வித வியாபாரமும் அடங்கினவனாய் இருந்தேனோ அந்த நான் சுத்தனாக இருக்கிறேன். அறிந்தவனாக நான் இருக்கிறேன். எந்த என்னிடமிருந்து இது வெளிக்கிளம்பியதாக ஏற்பட்டதோ, இது (எந்த) என்னால் தரிக்கப்படுகிறதோ, என்னிடத்திலேயே லயத்தை அடைகிறதோ, அந்த தனக்கு வேறு அதிஷ்டானமில்லாதவனாய், ஸத்யமாயும், ஆனந்தமாயும், ஞான மாயுமுள்ள ஸ்வருபத்தோடு கூடினவனாய் வியாபகமான அறிவுடையவனாய் இருக்கும் எனக்கு எப்பொழுதும் நமஸ்காரம்.

(பிரஹ்மமே ஆத்மாவாயிருப்பதால் ஆத்மாவாகிய தனக்கு நமஸ்காரம் என்று சொன்னால் பிரஹ்மத்தையே நமஸ்கரித்ததாகும், மேலும் தன்னைத்தவிர பிரஹ்மம் வேறில்லாததினால் தனக்கு நமஸ்காரம் செய்யவும் தன்னை விட வேறு பதார்த்தம் கிடையாதென்பதைக் காட்டுகிறார்.)

**ஸத்தாசித்ஸுக2ரூபமஸ்தி ஸததம் நாஹம் ச ந த்வம் ம்ருஷா**
**நேத3ம் வா(அ)பி ஜக3த் ப்ரத்3ருஷ்டம்கி2லம் நாஸ்தீதி ஜாநீஹிபோ4: |**
**யத் ப்ரோக்தம் கருணாவசாத் த்வயி மயா தத் ஸத்யமேதத் ஸ்பு2டம்**
**ச்ரத்3த4த்ஸ்வாநக4 சுத்3த4-பு3க்3தி4ரஸி சேந்மா(அ)த்ராஸ்து தே ஸம்சய: ||** 16

ஸத், சித், ஆனந்தம் என்பதை ஸ்வருபமாயுடைய ஒரு வஸ்துதான் எப்பொழுதும் இருக்கிறது. நானும் கிடையாது. நீயும் கிடையாது. இரண்டுமே வாஸ்தவமில்லை. இந்த ஜகத்தும் கிடையாது. நன்கு பார்க்கப்படும் அனைத்தும் இல்லை என்று அறிந்துகொள்ளும். என்னால் கருணையினால் உம்மிடத்தில் எது சொல்லப்பட்டதோ அது வாஸ்தவமே. பாபமற்றவரே! சுத்தமான புக்தி யுள்ளவராக இருப்பீரேயானால், இதை நன்கு நம்பும். இந்த விஷயத்தில் சந்தேஹம் வேண்டாம்.

**ஸ்வாரஸ்யைக-ஸுபோ3த4-சாரு-மநஸே ப்ரௌடா4நுபூ4தி-ஸ்த்வியம்**
**தா3தவ்யா ந து மோஹ-த3க்3த4-குதியே து3ஷ்டாந்தரங்கா3ய ச |**
**யேயம் ரம்யவித3ர்பிதோத்தமசிர: ப்ராப்தா சகாஸ்தி ஸ்வயம்**
**ஸா சேந் மர்கட-ஹஸ்த-தேசிபதிதா கிம் ராஜதே கேதகீ ||** 17

தன் ஆத்மாநந்தத்தையே நன்கு அறிந்துகொள்ள வேண்டுமென்ற அழகான மனஸ் உடையவனுக்கே இந்த " ப்ரௌடானுபூதி'என்பது கொடுக்கப்பட வேண்டியது. மோஹத்தினால் கனன்ற கெட்டபுத்தியோடு கொடுக்கவேகூடாது. எப்படியிருந்தால் நன்றாயிருக்குமென்று அறிந்த ஒருவனால் கொடுக்கப்பட்டு உத்தமமான சிரஸில் தரிக்கப்பட்டு தானாகவே எந்த இந்தத் தாழம்பூ பிரகாசிக்கிறதோ, அது குரங்கின் கையில் அகப்பட்டு விட்டதேயானால் பிரகாசிக்குமா?

